# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 8 | இதழ் 11 | ஜுன் 10, 2022 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 8 | Issue 11 | June 10th, 2022 | Annual Subscription Rs. 100/-




மெய்யான பிரச்சினை எது?

# சேலத்தில் ஸ்ரீ பகவத் ஐயாவின் 3 நாள் நேரடி ஞான முகாம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நேரடி ஞான முகாம், சேலம் ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது.

| | | |
|---|---|---|
| நாள் | : | 24-06-22 காலை 9.00 மணிமுதல் 26-06-22 மதியம் 3.00 மணிவரை |
| இடம் | : | சேலம், ஸ்ரீபகவத் பவன், ஜருகு மலை அடிவாரம், கொடம்பைக் காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (po), சேலம். |

முகாம் கட்டணம் : ரூபாய்.5000/- நபருக்கு

1) ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் முதல் நாள் 23-06-22 வியாழக்கிழமை மாலை 6 மணிக்குக்குள் வந்து சேர வேண்டுகிறோம்.

2) ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக தங்கும் வசதி உள்ளது.

தனி அறை வேண்டுபவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம். இதற்கு தனிக் கட்டணம் செலுத்த வேண்டுகிறோம்.

முன் பதிவுக்கு

கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை, ஆதார் Xerox copy உடன் June Gnana Muham என Type செய்து Whatsappல் அனுப்ப வேண்டிய எண்: 9942219065.

ஸ்ரீ பகவத் மிஷன் Account HDFC Bank & SBI Bankல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission**
HDFC Bank A/c No.15907620000075
NEFT IFSC : HDFC0001590

**Sri Bagavath Mission**
SBI Bank A/C No. 31784345329
IFS Code: SBIN0012772

**Google pay +918531036977**

அன்புடன்,
ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்-636003.
7904118421, 9994205880, 9789165555.

## உள்ளே


| | |
|---|---|
| மெய்யான பிரச்சினை எது? | 3 |
| கேள்வி பதில் | 6 |
| ஆசிரியர் பகுதி | 8 |
| ஜென்கதை - மனதை தூய்மையாக்குவது எப்படி? | 10 |
| நிகழ்ச்சி நிழல்கள் | 11 & 12 |


கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


## வாழும் ஞானி ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் குற்றாலத்தில் 3 நாள் ஞான முகாம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் 3 நாள் நேரடி ஞான முகாம், குற்றாலத்தில் நடைபெற உள்ளது.

நாள்: 13-08-2022 சனிக்கிழமை காலை 8.00மணிமுதல் 15-08-22 திங்கட்கிழமை மதியம் 3.00 மணி வரை

இடம்: **BWDA Institute of Development Finance - BID-FIN.** பழைய குற்றாலம் ரோடு, குற்றாலம் - 627802.

செலவு பகிர்வு ரூ.**5000/-** நபருக்கு
(உணவு மற்றும் தங்குமிடம் உட்பட)

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் முதல் நாள் 12-08-22 அன்று வெள்ளிக்கிழமை மாலைக்குள் வந்து சேர வேண்டுகிறோம்.

குளுகுளு குற்றாலத்தில் ஞான முகாம் நடைபெறுவதால் ஆனந்தமாக அருவியில் குளித்து ஞானத் தெளிவு பெற்று மகிழ்வுடன் செல்லலாம். குடும்பத்துடன் கலந்து கொள்வது சிறப்பு.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக தங்கும் வசதி உள்ளன.

தனி அறை வேண்டுபவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கவும்.

முன் பதிவுக்கு
**+917904118421, +919994205880, +919789165555**
அன்புடன்,
**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-636003.
**9994205880, 9789165555**




# மெய்யான பிரச்சினை எது?



- ஸ்ரீ பகவத்

இன்பமும் துன்பமும் மாறி மாறித்தான் வரும் என்பதை நாம் எல்லோருமே புரிந்து கொண்டு விட்டோம்.

பெரும்பாலானோருடைய கருத்து எவ்வாறு உள்ளதென்றால், "பிரச்சினை எதுவும் இல்லாமல் கொஞ்சம் நிம்மதியாக இருந்தால் மட்டுமே போதும்"

---இப்படிதான் எண்ணுகிறார்கள்.

அவர்களது எண்ணமும் நியாயமானதாகவே தோன்றுகிறது.

இப்படி நாம் எல்லோருமே பிரச்சினை பிரச்சினை என்று பலவாறாகக் கூறி வருகிறோம்.

உண்மையில் பிரச்சினை என்றால் என்ன ?

பிரச்சினை என்று எதைத்தான் கூறுகிறோம்?

ஓர் உதாரணம்:

இரண்டு வகையான நிலைகள் இருப்பதாக வைத்துக்கொள்வோம்.

முதலாவதாக வருவது முதல் நிலை; இரண்டாவதாக வருவது இரண்டாம் நிலை.

நமக்குக் காலையில் படுக்கையிலிருந்து எழுந்தது முதல் இரவு படுக்கும் வரை அடுக்கடுக்கான பிரச்சினைகள். ஒன்று முடியும் முன்பே அடுத்தடுத்த பிரச்சினை. ஆனால் அத்தனை பிரச்சினைகளுக்கு மத்தியிலும் நம்முடைய மனது மட்டும் அமைதியோடும் நிம்மதியாகவும் இருப்பதாக வைத்துக்கொள்வோம்.

--- இதுதான் முதல் நிலை.

அடுத்தது இரண்டாவது நிலை.

இந்த இரண்டாவது நிலையில் என்ன நடக்கிறது ?

காலையில் நாம் படுக்கையிலிருந்து எழுந்தது முதல் இரவு படுக்கும் வரை நமக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை. நமது வீட்டிலுள்ள அத்தனை நிகழ்வுகளும் அமைதியாகவும், சீராகவும் நடக்கின்றன. நமது அலுவலகத்திலும் மற்றும் வெளியிடங்களிலும் நம்மோடு தொடர்புடைய அனைத்து நிகழ்வுகளும் சீராகவே நடைபெறுகின்றன.

ஆனால் ---

நமது மனம் மட்டும் நிம்மதி இல்லாமல் பரிதவித்துக் கொண்டிருக்கிறது.

"இது அப்படி ஆகிவிடுமோ?"

"அது இப்படி ஆகி விடுமோ? "

--- என்ற பரிதவிப்புடன் இருந்து வருகிறது.

அதாவது,

முதலாவது நிலையில்,

ஆயிரம் பிரச்சினைகளுக்கு மத்தியிலும் நம்முடைய மனது மட்டும் அமைதியாக உள்ளது.

இரண்டாவது நிலையில்,

நாம் எந்தப் பிரச்சினைகளையும் எதிர்கொள்ளாத போதும், நம்முடைய மனது மட்டும் நிம்மதி இல்லாமல் பரிதவித்துக் கொண்டிருக்கிறது.

இந்த இரண்டு வகையான நிலைகளிலும் நாம் விரும்பக்கூடிய நிலை எது?

முதல் நிலையா?

அல்லது இரண்டாம் நிலையா?

நம்மில் பெரும்பாலானோர் இந்த இரண்டாவது

நிலையில்தான் வாழ்ந்து வருகின்றோம்.

நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலைகள் நன்றாகவே இருந்தாலும் கூட, நாம் எல்லோரும் தேவையற்ற மனப்பதட்டத்துடனும், பரிதவிப்புடனுமே இருந்து வருகிறோம்.

நம்மையறியாமலேயே நாம் அனைவரும் மேலே கண்ட முதல் நிலையையே விரும்புகின்றோம்.

பிரச்சினைகள் எப்படி இருந்தாலும் சரி,

சூழ்நிலைகள் எப்படி இருந்தாலும் சரி,

நமது மனம் மட்டும் நிம்மதியாக இருந்தால் அது மட்டுமே போதும்.

இவ்வாறுதான் நாம் அனைவரும் எண்ணுகிறோம்.

ஆனால் அத்தனை பிரச்சினைகளுக்கு மத்தியிலும் நம்முடைய மனதை நிம்மதியாகவும், அமைதியாகவும் வைத்திடுவது சாத்தியமா?

இதைப் பார்ப்பதற்கு முன்னால் பிரச்சினை என்றால் என்ன என்பதையும் இன்னும் ஒரு கோணத்தில் நாம் பார்க்க வேண்டியது உள்ளது.

பிரச்சினை என்றால் என்ன ?

நாம் தெருவில் நடந்து போய்க்கொண்டிருக்கிறோம். நமது கைப்பையில் 50,000 ரூபாய் உள்ளது. யாரோ ஒருவர் அதைப் பிடுங்கிக் கொண்டு ஓடுகிறார்.

இது ஒரு பிரச்சினை.

வீடு கட்டுவதற்காக நிலம் ஒன்றை வாங்கிப் போட்டு வைத்துள்ளோம். நாம் எப்படி வீடு கட்டலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கும் போதே, நமது நிலத்தில் யாரோ ஒருவர் வீடு கட்ட ஆரம்பிக்கிறார்.

இதுவும் ஒரு பிரச்சினையே.

நமக்கும் இன்னொருவருக்கும் இடையே வழக்கு ஒன்று நீதிமன்றத்தில் நடந்து கொண்டிருக்கிறது. அதில் நமக்கு விரோதமாகத் தீர்ப்பு ஆகி விடுகிறது.

இதுவும் ஒரு பிரச்சினைதான்.

இப்படி பிரச்சினைகளை அடுக்கிக் கொண்டே போகலாம். ஆயிரக்கணக்கான பிரச்சினைகள் இருக்கின்றன.

இந்தப் பிரச்சினைகள் அனைத்தும் நமது மன நிம்மதியைக் கெடுத்து விடுகின்றன.

இந்தப் பிரச்சினைகளுக்கு மத்தியில் நிம்மதியாக இருப்பது சாத்தியமா ?

நாம் வழக்கமாக குறிப்பிடும் ஒரு சம்பவம்:

இளம் வயது உள்ள ஒரு தகப்பனார் தனது இரண்டு குழந்தைகளுடன் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டு இருக்கிறார்.

நான்கு மற்றும் ஐந்து வயதுள்ள அந்தக் குழந்தைகள் இருவரும் அந்தப் பெட்டியில் உள்ள அனைத்து இடங்களிலும் ஓடுவதும் சாடுவதும் மற்றவர் உடமைகளை இழுத்துப் போடுவதுமாக ஒரே சேஷ்டை. அந்த தகப்பனாரும் அவர்களை சரிவரக் கண்டிப்பதாகத் தெரியவில்லை.

ஏதோ பெயருக்குத்தான் கண்டிக்கிறாரே தவிர அவர்களை சரியான முறையில் கட்டுப்படுத்தவில்லை. பொறுத்துப் பொறுத்துப் பார்த்த சக பயணிகளில் ஒருவர் மட்டும் அந்தத் தகப்பனாரிடம் "நீங்கள் உங்கள் குழந்தைகளைக் கொஞ்சம் கட்டுப்படுத்தி வைக்க வேண்டாமா?" என்று கேட்கிறார்.

அந்தத் தந்தை அவருக்குப் பதில் கொடுத்தார்.

"இந்தக் குழந்தைகள் மிகவும் சிறியவர்கள். எதையும் சரிவரப் புரிந்து கொள்ளும் வயதில் இல்லை. அவர்களது செயலுக்கு நான் உங்களிடம் மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன். நாங்கள் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம் என்பதே அவர்களுக்குத் தெரியாது. இவர்களது தாயார் அதாவது எனது மனைவி ஒரு கல்லூரியில் பேராசிரியையாக இருந்தார். அவர் மாணவிகளை வட இந்தியாவுக்கு சுற்றுலாவாக அழைத்துச் சென்றிருந்தார்...

"அங்கே ஆபத்தில் சிக்கியிருந்த ஒரு மாணவியைக் காப்பாற்றும் முயற்சியில் அவரும் மரணம் அடைந்து விட்டார். அவரது உடல் அங்கே உள்ள மருத்துவமனையில் வைக்கப்பட்டுள்ளது. அதை வாங்குவதற்காக தான் நாங்கள் அங்கே சென்று கொண்டிருக்கிறோம். இவர்களைத் தனியே விட்டு வர முடியாததால் உடன் அழைத்துச் செல்கிறேன். தங்கள் தாயின் உடலைப் பார்த்து அவர்கள் எவ்வாறு நடந்து கொள்வார்கள் என்பதும் எனக்கு தெரியவில்லை. அவர்களுடைய செயல்களுக்கு நான் உங்களிடம் மீண்டும் மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன்."

இப்படி அவர் சொல்லி முடித்தார். இப்போது அந்தப் பெட்டியில் உள்ள அனைவருடைய மனநிலையும் தலைகீழாக மாறிவிட்டது. அந்தக்

குழந்தைகள் தொடர்ந்து தங்களுடைய சேஷ்டைகளில் ஈடுபட்டுக் கொண்டுதான் இருந்தார்கள்.

ஆனால் அவர்களது செயல்கள் எவரையும் பாதிக்கவில்லை.

இங்கு என்ன நடந்துள்ளது?

செயல்கள் அதே செயல்கள் தான். முதலில் அவர்கள் அனைவரும் அந்தச் செயல்களினால் கொதித்து போய் இருந்தார்கள். இப்போது அந்தச் செயல்கள் எவரையும் பாதிக்கவில்லை.

முதலில் அவர்களைப் பாதித்த அந்தச் செயல்கள் இப்போது ஏன் அவர்களைப் பாதிக்கவில்லை?

என்ன விதமான மாற்றம் இங்கே ஏற்பட்டுள்ளது?

இந்த மாற்றம் எங்கே ஏற்பட்டுள்ளது?

வாழ்க்கைப் பிரச்சினைகளால் பாதிக்கப்பட்ட வியாபாரி ஒருவர், மனதில் அமைதி வேண்டி ஞானி ஒருவரை சந்திக்க அவருடைய ஆசிரமத்துக்கு வந்தார். அவர் வரும்போது இரவாகிவிட்டது. ஞானியிடம் தன்னுடைய பிரச்சினைகளைக் கூறினார். மன நிம்மதியை அடைவதற்கான தீர்வைக் கேட்டார்.

ஞானி அவரிடம், " நாம் இது பற்றி நாளை பேசுவோம். இன்று நீ பயணக் களைப்பில் இருக்கிறாய். என்னுடைய படுக்கை அறையையே உனக்குத் தருகிறேன். நன்றாக ஓய்வு எடு. நாளை சந்திப்போம்" என்று கூறி, அவர் தனது படுக்கையை வந்தவரிடம் ஒப்படைத்து விட்டு வெளியே சென்று விட்டார்.

பயணக் களைப்பிலிருந்த வியாபாரியும் அந்த படுக்கையில் படுத்து நன்றாகத் தூங்கி விட்டார்.

இரவு சுமார் இரண்டு மணி இருக்கும். யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டு எழுந்து கதவைத் திறந்தார். ஞானி தான் அங்கே நின்று கொண்டிருந்தார்.

"என்ன வேண்டும் சாமி?" என்று அவர் கேட்கவும் அந்த ஞானி, "நான் எனது செல்லப்பிள்ளையை மறந்து விட்டு விட்டுச் சென்று விட்டேன். அவன் ரொம்ப நல்ல பிள்ளை; உனக்கு தொந்தரவு எதுவும் கொடுத்திருக்க மாட்டான்", என்று சொல்லி, அவரே அந்தப் படுக்கையைத் தூக்கி அதன் உள்ளிருந்த பெரிய நீண்ட கருநாகப் பாம்பு ஒன்றை உருவி எடுத்துத் தனது தோளில் போட்டுக் கொண்டு, "நீ நன்றாக படுத்து உறங்கு. நாளைக் காலையில் சந்திப்போம்." என்று கூறிவிட்டுப் போய்விட்டார்.

அதன் பிறகு அந்த வியாபாரி படுக்கையில் படுத்தார். படுக்கை அசையும் போதெல்லாம் பாம்பு அசைவதாகவே தோன்றியது. அன்றைய தூக்கம் அவருக்கு அவ்வளவுதான்.

மறுநாள் காலையில் அவர் ஞானியை சந்தித்தார்.

அப்போது அந்த ஞானி, "இரவு நன்றாகத் தூங்கினாயா ?" என்று கேட்டார்.

அதற்கு அந்த வியாபாரி என்ன கூறியிருப்பார்?

"இரண்டு மணி வரைக்கும் நன்றாகத்தான் தூங்கினேன் சுவாமி! எப்போது நீங்கள் வந்து உங்கள் பாம்பை எடுத்துச் சென்றீர்களோ அத்துடன் எனது தூக்கமும் முடிந்து போய் விட்டது."

--- இப்படி தான் அவர் கூறினார்.

இப்போது ஞானி கேட்டார் :

"இரண்டு மணி வரைக்கும் பாம்புக்கு மேல் தான் படுத்துத் தூங்கினாய். உனது தூக்கத்துக்கு எந்த இடையூறும் இல்லை. அதன் பிறகு பாம்பு அங்கே கிடையாது. ஆனால் உனக்கு தூக்கம் இல்லை.

இப்போது உனக்கு ஒரு கேள்வி.

"உன்னுடைய தூக்கம் கெட்டுப் போனதற்குக் காரணம் பாம்பா? அல்லது பாம்பைப் பற்றிய நினைவா?"

இப்படி தான் நம்முடைய எல்லாவிதமான பிரச்சினைகளும் அமைந்துள்ளன.

நம்முடைய நிம்மதியற்ற தன்மைக்குக் காரணம் பிரச்சினையான செயல்களா? அல்லது அந்த செயல்களைப் பற்றிய நினைவா?

பிரச்சினையான நிகழ்வுகள் தான் நிம்மதியற்ற தன்மையை ஏற்படுத்துகிறதா? அல்லது அந்த நிகழ்வுகளைப் பற்றிய நினைவுகள் தான் நமக்கு நிம்மதியற்ற தன்மையை ஏற்படுத்துகிறதா ?

பிரச்சினைகள் அனைத்தும் இருப்பது போலவே இருக்கிறது.

ஆனால் பிரச்சினை என்று எதுவுமே இல்லை.





V.A.P. சரவணன்
செல் : 99942 05880




# கேள்வி பதில்...

## நீண்ட கால நட்பில் பிளவு ஏற்பட்டுள்ளது. மீண்டும் ஆத்மார்த்தமான நட்பு மலர என்ன செய்ய வேண்டும்?

**கேள்வி :** நண்பர் ஒருவருடன் கடந்த 30 ஆண்டுகளாக நான் ஆத்மார்த்தமாக பழகி வாழ்ந்து வருகிறேன். ஆரம்ப காலகட்டங்களில் நல்ல முறையில் தொடங்கிய எங்கள் நட்பு, பிறகு வியாபாரம், குடும்ப உறவுகள் என அனைத்திலும் வேரூன்றி மென்மேலும் வளர்ச்சியடைந்தது. இருவருமே இன்று ஒரு நல்ல நிலையில் வளர்ந்து இருக்கின்றோம். எனக்கு கடவுள் நம்பிக்கை, தானம்- தர்மம், தியானம், ஞானம் - முக்தி என ஆன்மிகத்தில் சிறுவயதிலிருந்தே சற்றே நாட்டம் அதிகம். நண்பருக்கு ஆன்மிகத்தில் அதிகமான ஆர்வம் இல்லை.

கடந்த ஐந்து ஆண்டுகளாக எனக்கும் நண்பருக்கும் இடையில் இருந்து வந்த ஆழமான நட்பில் விரிசல் ஏற்பட்டு இருக்கிறது.

எங்கள் வாழ்க்கையில் நடந்த சில காரணிகள் சில நிகழ்வுகள் என பலவும் சேர்ந்து எங்கள் இருவரையும் சற்று விலக்கி வைத்திருக்கிறது.

மீண்டும் எங்களது நட்பு தொடர நானும் கடந்த 5 வருடங்களாக எல்லா வகையான முயற்சிகளையும் செய்து பார்த்துவிட்டேன். எல்லாவற்றிலும் தோல்வியும் மன நெருக்கடியும் முரண்பாடும் போராட்டமும் மட்டுமே மிஞ்சியது. தற்போது எங்கள் நட்பு முன்புபோல ஆத்மார்த்தமாக இல்லை. என்னுடைய எல்லா முயற்சிகளும் தோல்வியை மட்டுமே தழுவுகின்றன.

ஸ்ரீ பகவத் ஐயாவின் புரிதலுடன் நான் பல ஆண்டுகளாக பயணித்தும் வருகிறேன். மனதின் இயக்கம், புரிதல் என எல்லாவற்றிலும் எனக்கு தெளிந்த அறிவும் இருக்கிறது. ஆனாலும் கூட இந்த விஷயத்தில் எனக்கு எந்த ஒரு மன நிறைவும் இதுவரை ஏற்படவில்லை.

நான் என்னதான் செய்வது? எப்படித்தான் இந்த விஷயத்தை அணுகுவது? என்னை வாட்டி வதைத்துக் கொண்டிருக்கும் இந்த நெடுநாள் கேள்விக்கு சரியான பதிலைத் தருமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறேன். மீண்டும் ஆத்மார்த்தமான நட்பு மலர நான் என்ன செய்ய வேண்டும்?

**பதில் :** நீங்கள் ஆத்மார்த்தமாக பழகியதில் எந்த தவறும் இல்லை. உங்களுடைய நட்பில் ஏற்பட்ட விரிசல் ஆதியில் ஏற்பட்டது இல்லை.

கடந்த ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு தான் இடையில் ஏற்பட்ட ஒன்று. இடையில் ஏற்பட்ட நட்பு முறிவு இடையிலேயே தானாக சரியாகிவிடும்.

நீங்கள் அவரை மனோரீதியாக எதிரியாகப் பார்க்கும் மன நிலையில் இருந்து முற்றிலுமாக விடுபடுங்கள்.

நண்பரை உங்கள் வாழ்க்கையில் மிக முக்கிய நபராக, மனோரீதியாக நீங்கள் கருத வேண்டும்.

உங்கள் நல் வாழ்க்கைக்கு தேவையான எல்லா உதவிகளையும் செய்யக் கூடியவராகவும் மேலும் சிக்கலான சூழ்நிலைகளை நீங்கள் சந்திக்கும் பொழுது உங்களுக்கு தேவையான எல்லா வகையான உதவிகளையும் உங்கள் நண்பர் மட்டுமே செய்யக்கூடியவர் என்ற முடிவான மனநிலையில் அவருடன் பழக வேண்டும்.

நண்பர் நமக்கு ஒருபோதும் எதிரியல்ல. கண்ணை இமை காப்பது போல நம்மை காக்க கூடியவர் என்ற மனநிலையுடன் நாம் அவருடன் செயல்பட வேண்டும்.

புறத்தில் அவர் எவ்வளவுதான் சரியில்லாமல் நடந்தாலும் நடந்து கொள்ளட்டும். நம்மை அவமானப் படுத்தினாலும் படுத்திவிட்டு போகட்டும். அதைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் நீங்கள் அவருக்கு தேவையான எல்லா நல்ல செயல்களையும் சிறப்பாக பொறுப்பேற்று செய்யுங்கள்.

நீங்கள் தொடர்ந்து இதே மனநிலையில் இருந்து கொண்டு அவருக்குத் தேவையான புறச் செயல்களை தொடர்ந்து செய்யுங்கள். அவருக்காக நீங்கள் செய்த

அந்த நல்ல செயல்கள், அவருக்குள்ளும் வேலை செய்யும்.

நண்பரின் செயல்பாடுகள் நமக்கு அவர் மீது வெறுப்பையும் கோபத்தையும் கூட ஏற்படுத்தலாம். இது தாமாக ஏற்படுவது - (Thought). இதனோடு போராடத் தேவையில்லை. நாமாக சிந்திக்கும் (Thinking) சிந்தனையில், அவர் நமது ஆத்மார்த்தமான நண்பர், நமது நலனில் அக்கறை கொண்டவர், நமக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவர், ஏதோ நமது செயல்களை தவறாக புரிந்து கொண்டதால் இவ்வாறு நடந்து கொள்கிறார் என்று முடிவெடுத்துக் கொண்டு அவருக்குத் தேவையான நல்ல செயல்களையே செய்ய வேண்டும்.

அவர் எப்படி வேண்டுமானாலும் நடந்து கொண்டு போகட்டும். ஆனால் நீங்கள் இவ்வாறு முறைப்படி சரியாக நடந்து கொள்ளுங்கள். காலப்போக்கில் கொஞ்ச நாட்களில் அவரும் அதே அணுகுமுறையை உங்களிடம் கையாளுவார்.

காலப்போக்கில் பிரச்சினையின் தீவிரம் குறையும். உங்கள் இருவருக்கும் இருக்கும் மனக்குறை மனநிறைவாக மாறிவிடும். மனநெருக்கடியில் இருந்து இணக்கமான சூழ்நிலையாக உருவாகும். எதிர்ப்பான மனநிலை அன்பாக மாறிவிடும். ஆத்மார்த்தமான நட்பு மீண்டும் தொடரும்.

மிக முக்கியமாக நாம் புரிந்துகொள்ள வேண்டிய விஷயம் எதிரியாக பார்க்கும் மனநிலையிலிருந்து நாம் நமக்கு உதவி செய்யக் கூடிய மிக நெருங்கிய நண்பராக பார்க்கும் மனநிலைக்கு மாற வேண்டியது ஒன்று மட்டும் தான்.

புற மாற்றத்தைப் பற்றியும் அவரின் செயல்பாட்டைப் பற்றியும் நாம் எந்தவிதமான பொறுப்பையும் எடுத்துக் கொள்ள வேண்டாம். மாற்றம் என்பது தானாக நிகழும்.

அகத்தில் ஒரு நிகழ்வை நாம் எவ்வாறு பார்க்கிறோமோ அதற்கு தகுந்தார் போல் தான் புறத்தில் செயல்களும் மாற்றம் அடையும்.

மற்றவர்களை பொறுத்தவரை என்றும் நாம் என்ன நினைக்கிறோம் என்பதை விட நாம் என்ன செய்கிறோம் என்பது மட்டுமே மற்றவர்களால் உணர முடியும்.

செயல்களைத் தான் உணர முடியும். நம்முடைய மனமாற்றத்தை நேரடியாக அவர்களால் உணர முடியாது.

இப்படி இந்த விஷயத்தை அணுகுவது ஒன்று மட்டுமே மிக சரியான தீர்வாகவும் உங்களுக்கு மன நிறைவையும் அளிக்கும் மா மருந்தாகவும் இருக்கும். ★

# இராஜபாளையத்தில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் 3 நாள் நேரடி ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நேரடி ஞான முகாம், இராஜபாளையத்தில் நடைபெற உள்ளது.

நாள் : 08-07-22 காலை 9.00 மணி முதல்
10-07-22 மதியம் 3.00 மணி வரை

இடம் : **Aravindh Herbal Lab (P) Limited,**
140, Mudangiar Road, 4th Kilometer,
Rajapalayam – 626117.

**முகாம் கட்டணம் :** ரூ. 1500/- நபருக்கு (சலுகை கட்டணம்) நன்கொடைகள் வரவேற்கப்படுகிறது.

1) ஞான முகாமிற்கு வெளியூரில் இருந்து வந்து கலந்து கொள்பவர்கள் முதல் நாள் 7-07-22 வியாழக்கிழமை மாலையே வந்து சேர வேண்டுகிறோம்.

2) ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக தங்கும் வசதி உள்ளது.

தனி அறை இல்லை. குறைந்த எண்ணிக்கையில் இருப்பதால் முன் பதிவு அவசியம்.

75 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள முடியும். எனவே முன்பதிவு செய்ய வேண்டுகிறோம்.

**முன் பதிவுக்கு**

கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை, ஆதார் **Xerox copy** உடன் **July Gnana Muhaam** என **Type** செய்து **WhatsApp**ல் அனுப்ப வேண்டிய எண்: 9942219065.

ஸ்ரீ பகவத் மிஷன் **Account HDFC Bank & SBI Bank**ல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission**

HDFC bank A/c No.15907620000075,
NEFT IFSC : HDFC0001590

**Sri Bagavath Mission**

SBI Bank A/C No. 31784345329
IFS Code: SBIN0012772

**Google pay +918531036977**

அன்புடன்,
ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்-636003.

**7904118421, 9994205880, 9789165555, 9790276206**

K.S. ஜீவமணி
செல் : 97891 65555



# ஆசிரியர் பகுதி

ஆன்மிகத்தில் அடைய வேண்டிய மிக உயர்ந்த கடை நிலை என்பது முக்தி என்ற விடுதலை தான்.

ஆனால் அந்த விடுதலை என்பது மனித குலத்துக்கே சொந்தமானது. நம் அனைவரின் பிறப்பியல்பே விடுதலைதான்.

பிறக்கும் போதே நம்மோடு வந்தது இந்த விடுதலை.

கள்ளம் கபடமற்ற குழந்தைகளை முக்தர்கள் என்றும் அழைப்பார்கள்.

குழந்தையும் தெய்வமும் ஒன்று என்று சொல்ல காரணமும் இதுவே.

நாம் வளர வளர புறச்சூழல் சார்ந்த அறிவும் நம்மோடு வளர்ச்சி பெறுகிறது. புறச் செயலை நிர்வகிக்கும் நமது அறிவு, நம் அகத்தையும் நிர்வகிக்க முற்பட்டு அகத்தில் முரண்படுகிறது.

மனதை நிர்வகிக்க முயற்சிக்கும் அறிவே அகத்தில் இயற்கையாக இயங்கும் விடுதலையோடு முரண்படுகிறது. நமது மனம் கள்ளங்கபடமற்ற தன்மையிலிருந்து பிரச்சினைக்குரிய ஒன்றாக மாற்றமடைகிறது.

மீண்டும் அகத்தில் கள்ளங்கபடமற்ற நிலையை; விடுதலையை அடைந்தவர்களை தாம் ஞானிகள் என்று அழைக்கிறோம்.

அதாவது விடுதலையை (முக்தி) கொடுக்கும் அறிவே ஞானம்.

இந்த ஞானத்தைப் பெறவே பலரும் ஆன்மிகத்தில் அனைத்துப் பயிற்சி முயற்சிகளை செய்துவருகின்றனர்.

இந்த ஆன்மிகப் பயிற்சி முயற்சிகளை பலகாலமாக தீவிரமாக செய்து ஒரு கட்டத்தில் ஒரு கையறு நிலையில் தோல்வியடைந்து அகச் சரணாகதி அடைந்தவர்களே விடுதலை பெற்றவர்கள்; முக்தி அடைந்தவர்கள்.

இதுவரை இப்படி தீவிரமான பயிற்சி முயற்சிகளில் ஈடுபட்டவர்களில் கோடியில் ஒரு சிலரே ஞானத்தைப் பெற்று விடுதலையை அடைந்திருக்கிறார்கள்.

ஆனால் ஞானம் என்பது அனைவராலும் அடையக்கூடியது என்றும், விடுதலை என்பது வினாடி நேரத்தில் அடையக்கூடியது என்றும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் கூறிவருகிறார்கள்.

இது எப்படி சாத்தியம் என்பது பலரது கேள்வி.

இதுவரை வந்த ஞானிகள் அனைவரும் ஆன்மிகப் பயிற்சிகளை தீவிரமாக செய்து, ஒரு கையறுநிலையில் அகச் சரணாகதி அடைந்து அகத்தளவில் சும்மா இருந்ததால் விடுதலை பெற்றார்கள்.

அகச் சரணாகதி என்பதும் அகத்தளவில் செயலற்று சும்மா இருப்பதும் ஒன்றே.

எந்த உண்மையை புரிந்து கொண்டால் அகச் சரணாகதி ஏற்படுமோ அந்த உண்மையைப் புரிந்து கொள்ளும் அறிவே மெய்ஞானம்.

இந்த உண்மையைப் புரிந்துகொள்ள வினாடி நேரமே போதுமானது.

அது என்ன உண்மை?

நமது மனம் இயற்கையில் எப்படி இயங்குகிறது? -என்ற உண்மையை புரிந்து கொள்வதே போதுமானது.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு இயல்பு உடையவர்கள். அவரவர்கள் இயல்பு வேறுபட்டிருந்தாலும் மனதின் இயற்கையான இயக்க உண்மை மாறுவதில்லை.

மனதில் தோன்றும் எண்ணங்களும் உணர்வுகளும் நமக்கு (அறிவுக்கு) கட்டுப்பட்டவை அல்ல.

அவைகள் அனைத்தும் அவை போக்கில் தாமாகத் தோன்றி அவை போக்கில் தாமாக மறைகின்றன.

இவற்றை மாற்றி அமைக்கவோ,

மோசமானவை என்று இவற்றிலிருந்து விடுபடவோ, நல்லவை என்று தக்க வைக்கவோ நமக்கு எந்த வேலையும் இல்லை என்று புரிந்து கொள்வதே போதுமானது.

செயலுக்கு தேவையான எண்ண உணர்வுகளை பயன்படுத்திக் கொள்ளலாம். தேவையற்ற எண்ண உணர்வுகளை அப்புறப்படுத்த வேண்டிய அவசியமில்லை.

முடிவாக தெரிந்து கொள்ளவேண்டியது:

**மனதை நிர்வாகம் செய்யாதே – Don't manage your mind.**

**மனதில் தோன்றும் எண்ண உணர்வுகளை தேவைக்கு ஏற்ப பயன்படுத்தி கொள் – You can use your mind for life as needed.**

இந்த உண்மையைப் புரிந்துகொள்ள விநாடி நேரம் போதும்.

இவ்வுண்மை புரியாமல் வாழ்க்கையை வீணடித்து துன்பப்பட்டுக் கொண்டு இருப்பவர்கள் பல கோடி.

இதுவரை புரியாத மனதின் ஞான இரகசியத்தை எளிமைப்படுத்தி மனிதகுலத்திற்கு தெரிவித்து புரியவைத்து உய்வித்தவர் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்.

இப் புரிதல் நம்மை மாற்றி, உலகத்தையே மாற்றும் வல்லமை கொண்டது.

தற்போது இப் புரிதல் பல ஆயிரம் பேர்களை மாற்றி அவர்கள் வாழ்வில் ஒளியேற்றி வைத்துள்ளது.

இது மனித குலம் முழுவதும் சென்றடைய வேண்டும். அனைவரையும் மனப் போராட்டத்தில் இருந்தும் துன்பத்திலிருந்தும் துயரத்திலிருந்தும் விடுபடவைத்து உய்விக்க வேண்டும் என்பதே நமது ஸ்ரீபகவத் மிஷனின் நோக்கம்.

இந்த ஞான புரிதல் அனைவருக்கும் பொதுவானது. வேறு எந்த ஆன்மிக அமைப்பிற்கும் பேதமானது அல்ல.

இதனை புரிந்து கொண்டு அனைவரும் பயனடைய வேண்டும்.

அந்த வகையில் சேலம் அம்மாப்பேட்டை அறிவுத்திருக்கோயில் பேராசிரியர்கள், அறங்காவலர்கள், நிர்வாகிகள், அன்பர்கள் என அனைவரும் மே மாதம் 7 மற்றும் 8ஆம் தேதிகளில் சேலம் ஸ்ரீபகவத் பவனில் நடைபெற்ற ஞானம் முகாமில் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

இதனைத் தொடர்ந்து சென்னையில் மே மாதம் 22-ஆம் தேதி ஏற்கனவே ஞானம் முகாமில் கலந்து கொண்டவர்களுக்கான Review meeting ஞான உறுதி முகாமாக நடைபெற்றது. இதில் பிரபல இருதய மருத்துவர் **டாக்டர் V. சொக்கலிங்கம்** அவர்கள் கலந்து கொண்டு உரையாற்றினார்கள்.

மேலும் மே மாதம் 26ஆம் தேதி முதல் 29ஆம் தேதி வரை கோவைக்கு அருகில் உள்ள ஆனைக்கட்டியில் (கேரளா) சூன்யப் பிரவாகம் நூல் எழுதிய **திரு. ஆனந்தகுமார்** அவர்களின் சத் தரிசனத்தில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இதனை ஏற்பாடு செய்திருந்த திரு. ஆனந்தகுமார் அவர்களுக்கு உளமார்ந்த நன்றிகளையும் பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இதனைத் தொடர்ந்து மே மாதம் 30ஆம் தேதி திங்கட்கிழமை கோவை சுந்தராபுரம் செங்கப்ப கோனார் திருமண மண்டபத்தில் மாலை 6 மணி முதல் 8.30 மணி வரை ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஞான உரை வழங்கினார்கள். இதில் 200 அன்பர்கள் கலந்து கொண்டனர். இதனை சிறப்பாக ஏற்பாடு செய்திருந்த ஸ்ரீ பகவத் மிஷன் கோவை அன்பர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இதனைத் தொடர்ந்து ஜுன் மாதம் 4 மற்றும் 5ஆம் தேதிகளில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஞான முகாம் திருநெல்வேலியில் சிறப்பாக நடைபெற்றது. இதில் 80 அன்பர்களுக்கு மேல் கலந்து கொண்டு பயனடைந்தனர். இதனை ஏற்பாடு செய்திருந்த திருநெல்வேலி ஸ்ரீபகவத் மிஷன் அன்பர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றிகளையும் பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

தற்போது ஒவ்வொரு மாதமும் ஞான முகாம் நடைபெற்று வருகிறது.

ஜுன் மாதம் 24, 25, 26 தேதிகளில் சேலம் ஸ்ரீபகவத் பவனிலும், ஜுலை 8, 9, 10-ஆம் தேதிகளில் இராஜபாளையம் அரவிந்த் ஆசிரமத்திலும், ஆகஸ்ட் மாதம் 13, 14, 15 தேதிகளில் குற்றாலத்திலும் நடைபெற இருக்கிறது. இதன் விவரங்கள் இந்த மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளன. இத்தகவலை தேடுதல் உள்ளவர்களுக்கு தெரிவித்து அனைவரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற அழைக்கின்றோம்.



ஜென் கதை

# "மனதை தூய்மையாக்குவது எப்படி ?"

மனதை எப்படியாவது தூய்மைப் படுத்தி விட வேண்டும் என்று விடாமுயற்சியுடன் பல தியானங்கள், ஆன்மிக விசாரணைகள், பயிற்சிகள், முயற்சிகள் என பலவற்றையும் விடாது செய்து வந்தான் ஓர் இளைஞன்.

ஆனாலும் அவன் மனம் தூய்மை அடைந்ததாகத் தெரியவில்லை.

மனதை தூய்மைப் படுத்துவதற்கான அவனுடைய எல்லா முயற்சிகளும் தோல்வி அடைந்தன.

வழி தெரியாமல் ஏங்கித் தவித்தான் நெடுநாட்களாக...

"நம்மால் நம் மனதை தூய்மையே படுத்த முடியவில்லை" என்று தன்னை மாய்த்துக் கொள்ளவும் துணிந்து, ஓடும் ஆற்றில் எகிறி குதித்து தன்னை மாய்த்துக் கொள்ள முயன்றான்.

அவனுக்கு இயல்பாகவே நீச்சல் தெரியும் என்பதால் அவனை அறியாமல் நீச்சல் அடித்து மிகுந்த மனக் கவலையுடன் கரை ஒதுங்கினான்.

அந்த வழியாக வந்த ஓர் ஞானி அவனை மீட்டு ஆசிரமம் அழைத்துச் சென்றார்.

"இந்த சிறிய வயதில் எதற்காக இப்படி உன்னை மாய்த்து கொள்ள முயல்கிறாய்" என்றார்.

"சாமி என் மனதை மட்டும் தூய்மை படுத்தவே முடியவில்லை. என்ன செய்வது என்று தெரியவில்லை. என்னுடைய எல்லா முயற்சிகளும் தோல்வியையே அடைந்தன." தோல்வியுற்ற நிலையில் நான் வாழ்ந்து என்ன பிரயோஜனம்" என்று மனம் நொந்து கூறினான்.

"உன் மனதை நான் தூய்மை செய்கிறேன்" என்றார் ஞானி.

இளைஞனுக்கு நம்பிக்கையே இல்லை.

"நிச்சயமாக நான் உன் மனதை தூய்மை செய்கிறேன் இளைஞனே. நீ என்னுடன் ஒரு வாரம் தங்கி செல் நிச்சயமாக உன் மனம் தூய்மை அடைந்து விடும்" என்று ஆணித்தரமாக எடுத்துரைத்தார்.

அவர் பேச்சில் இருந்த உறுதியும் ஆழமும் அவனை அந்த இடத்தில் நகரவிடாமல் அங்கேயே தங்கிட செய்தது.

ஞானி, காலை-மாலை என இரு வேளைகளும் ஆற்றில் குளிப்பதை வழக்கமாக வைத்துள்ளவர். இளைஞனையும் இவருடன் அழைத்துச் செல்கிறார்.

முதல் நாள் இரவு பெய்த கடுமையான மழையால் ஆற்றுத் தண்ணீர் செம்மண் நிறமாக ஓடியது.

ஞானி எதையும் கண்டுகொள்ளாமல் ஆற்றில் இறங்கி குளித்து விட்டு மேலே கரை ஏறினார். இளைஞன், "சாமி எப்படி குளிப்பது? ஆற்றுத் தண்ணீர் இவ்வளவு கலங்கலாக செந்தண்ணீராக வருகிறதே" என்றான்.

"என்னைப் போலவே நீயும் குளித்துவிட்டு வா இளைஞனே" என்றார்.

வேறு வழியில்லாமல் தயங்கித் தயங்கி குளித்து கரை ஏறினான்.

மீண்டும் மாலை குளிப்பதற்கு ஆற்றுக்கு இருவரும் வந்தனர்.

இப்பொழுது தண்ணீர் நன்றாக இருந்தது. "நாம் நன்றாக குளித்து விடலாம்" என்றான் இளைஞன்.

இருவரும் இறங்கி காலையை விட இப்பொழுது மகிழ்வாக குளித்து கரை ஏறினர்.

அடுத்த நாள் காலை மீண்டும் ஆற்றில் குளிப்பதற்காக வந்தனர்.

தண்ணீர் இப்போது கண்ணாடி போல தெளிவாக சலசலத்து ஓடியது.

தண்ணீருக்கு அடியில் இருக்கும் அத்தனை கற்களும் பாறைகளும் என அனைத்தும் கண்ணாடி போல் தெளிவாக சலசலத்து ஓடும் சத்தத்துடன் ஓடிக்கொண்டிருந்தது ஆறு.

"இவ்வளவு அழகாக இருக்கும் ஆறா நேற்று மட்டும் அவ்வளவு அசிங்கமாக இருந்தது. ஏன்?" என்று இளைஞனிடம் கேட்டார் ஞானி.

"அது இயற்கையாகவே, தானாகவே, கொஞ்சம் கொஞ்சமாக சுத்தமாகிவிடும்" என்றான்.

"நம்மால் ஆற்றை சுத்தப்படுத்த முடியுமா?" என்றார்.

"நிச்சயமாக ஒரு போதும் முடியாது சாமி"

என்றான்.

"இப்படித்தானப்பா உன் பிரச்சனையும் இருக்கிறது" என்றார் ஞானி.

"புரியவில்லை சாமி" என்றான்.

"உன் மனம் எனும் ஆற்றை நீ சுத்தப்படுத்த வேண்டும் என்று முயற்சி செய்கிறாய். உன்னால் ஆற்றையும் சுத்தப்படுத்த முடியாது, உன் மனதையும் சுத்தப்படுத்த முடியாது" என்றார்...

"புதிய மழை பெய்து வந்து செந்தண்ணீர். அடுத்த அடுத்த தினங்களில் தாமாகவே தூய்மையடைந்து கண்ணாடி போன்று தெளிவாக மாறிவிட்டது அல்லவா? அதுபோல உன் மனமும் சுதந்திரமாக இயங்குவதற்கு நீ சுதந்திரம் வழங்கி விட்டால் உன் மனமும் சலசலத்து ஓடும் தெளிவான ஆற்றைபோல தூய்மை அடைந்துவிடும் என்பதை மட்டும் புரிந்து கொள்" என்றார்.

"ஆற்றை அப்படியே விட்டுவிட்டால் எவ்வளவு அழுக்குகள் இருந்தாலும் அத்தனையும் ஓடி மறைந்து விடும். அதுபோல நம் மனதையும் தூய்மைப்படுத்த எதுவும் செய்யாமல் நீ சும்மா இருந்தால் மட்டும் போதும். கண்ணாடியைப் போல தெளிந்துவிடும்" என்றார்.

இளைஞன் மனதில் வெகுநாட்களாக சேர்ந்து இருந்த அத்தனை மன அழுக்குகளும் பிரவாகித்து ஓட தொடங்கின.

அவன் மனமும் கண்ணாடியாக மாறத் தொடங்கியது.



# நிகழ்ச்சி நிழல்கள்



சேலம் ஸ்ரீபகவத் பவனில் அம்மாப்பேட்டை அறிவுத்திருக்கோயில் அன்பர்களுக்கு ஞான முகாம் நடந்த போது....










ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் தன் குடும்பத்தினருடன்...

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555






அறிவுத்திருக்கோயில்
அன்பர்களுக்கு ஞான
முகாம் நடைபெற்ற போது.




உடல் ஊனமுற்ற மற்றும் விழி இழந்தோர்
காப்பகத்திற்கு தேவையான பொருட்கள் வழங்கியபோது...


